# பகவத் பாதை

BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 7 | இதழ் 4 | ஆகஸ்ட் 10, 2020 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 7 | Issue 4 | August 10th, 2020 | Annual Subscription Rs. 100/-



## பிரவாகம் இயற்கையானது



பகவத் பாதை தமிழ் மாத இதழ்

பகுத்தறிவானது நாம் எதிர்கொள்ளும் சூழ்நிலையை நிர்வாகம் செய்வதற்காக மட்டுமே அமைந்துள்ளது. மற்றபடி மனதை நிர்வாகம் செய்ய எந்தப் பதிவும் தேவையில்லை. எந்தப் பகுத்தறிவும் தேவையில்லை.

ஒவ்வொரு புலனும் தாமாகவே தன்னை சமன் செய்து கொள்வதைப் போல், நமது மனமும் தாமாகவே தன்னை சமன் செய்து கொள்ளும் தன்மையிலேயே உள்ளது.

- ஸ்ரீ பகவத்

# புரவலர்கள்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்தச் செயலும் செய்வதில்லை.

அய்யாவின் கருத்துக்களை உலகம் முழுவதும் உள்ள ஆன்மிகத் தேடுதல் மிகுந்தவர்களிடத்தும், மனவேதனைகள் உள்ளவர்களிடத்தும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக download செய்துகொள்ளும் வசதியையும், மிகக் குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

எனவே ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் வேண்டுகோளை ஏற்று தாங்களாகவே முன் வந்து அய்யா அவர்களது தனிப்பட்ட செலவுகளிலும் ஸ்ரீ பகவத் பவனின் செலவுகளிலும் பங்கு கொள்ளப் பலர் புரவலர்களாக இணைந்து பகவத் ஐயாவின் குடும்ப உறுப்பினர்கள்தாம் என உறுதி செய்துள்ளீர்கள்.

உங்கள் அனைவருக்கும் எங்களது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இது வரை ஆயிரக்கணக்கானவர்கள் ஐயாவின் கருத்துகளினால் ஞானமடைந்துள்ளனர். இன்னும் ஆயிரக்கணக்கானவர்கள் ஞானமடையக் காத்திருக்கின்றனர்.

ஆன்மிக உலகில் இது வரை இத்தகைய மாற்றம் ஏற்பட்டது இல்லை. இது ஒரு புதிய சகாப்தம்.

இதற்கு முன்னால் எங்கோ ஒருவர் எப்படியோ ஞானமடைந்திருப்பார். ஆனால் இப்போது எவர் வேண்டுமானாலும் ஞானமடையலாம் என்ற அளவில் ஞானமும் முக்தியும் எளிதாக்கப்பட்டுவிட்டன.

ஆன்மிகத்தில் பல காலத்தேடுதலில் கூட கிடைக்காத ஞானத் தெளிவு ஐயாவின் புதிய சரியான அணுகுமுறையினால் எளிதில் பலரும் துன்பங்களையும் துயரங்களையும் கடந்து விடுதலையோடு வாழ்ந்து வருகின்றனர்.

ஆன்மிக ரீதியாகவும் உளவியல் ரீதியாகவும் புதிய மாற்றத்தை ஏற்படுத்தக் காரணமான நமது அய்யாவுடன் நாம் அனைவரும் முதல் நிலை குடும்ப உறுப்பினர்களாகப் பங்கு வகித்திட இதனை ஒரு நல் வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்வோமாக.

மேலும் புரவலராக இணைய வாய்ப்புள்ள அன்பர்கள் இணைந்து உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இதன் மூலம் வியாபார நோக்கில் ஈடுபட்டு வருவாய் ஈட்டுவதில் நாட்டமில்லாத நமது ஸ்ரீ பகவத் மிஷன் மற்றும் ஸ்ரீ பகவத் பவன் ஆகியவற்றின் அன்றாடச் செலவினங்களில் நீங்கள் பங்கேற்றிட முடியும்.

மாதந்தோறும் ரூ1000/= வழங்கும் புரவலராகவோ அல்லது மாதந்தோறும் ரூ500/= வழங்கும் சிறப்புப் புரவலராகவோ பொறுப்பேற்றிட வேண்டுகிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன் Account HDFC Bank & SBI Bank ல் உள்ளது. இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

**Sri Bagavath Mission,** Hdfc bank A/c No.15907620000075
NEFT IFSC : HDFC0001590

**Sri Bagavath Mission,** SBI Bank A/c No. 31784345329
IFS Code: SBIN0012772

அன்புடன்

**ஜீவமணி & சரவணன்,** ஸ்ரீ பகவத் மிஷன்.

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555


This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075





- ஸ்ரீ பகவத்

# பிரவாகம் இயற்கையானது

நீங்கள் ஒரு மரத்தடியில் அமர்ந்து இருக்கிறீர்கள். எங்கிருந்தோ வந்த பறவை ஒன்று மரக்கிளையில் அமர்ந்து இனிய குரலில் பாடுகிறது. அதன் குரல் உங்கள் காதுகளில் ஒலிக்கிறது.

அந்தப் பறவை பாடி முடித்துவிட்டு அங்கிருந்து பறந்து சென்று விடுகிறது. உங்கள் காதுகளில் ஒலித்த அந்தப் பறவையின் ஒலி என்ன ஆகும்?

பறவை பாட்டை நிறுத்தியதும் அதனால் உங்கள் காதுகளில் எதிரொலித்துக்கொண்டிருந்த ஒலியும் நின்றுவிடும்.

பாட்டை அது நிறுத்திய பிறகும் கூட அதனுடைய ஒலி உங்கள் காதுகளில் ஒலித்துக்கொண்டே இருந்தால் அதன் பொருள் என்ன?

காதுகள் பழுதடைந்து விட்டன என்பது தானே!

இதுபோல் நீங்கள் ஒரு அழகான பறவையைப் பார்க்கிறீர்கள். அந்தப் பறவையின் காட்சி உங்கள் கண்களில் பிரதிபலிக்கிறது. அதன் மூலம் நீங்கள் அந்தப் பறவையைப் பார்ப்பதாக உணருகிறீர்கள்.

இப்போது அந்தப் பறவை அங்கிருந்து பறந்து போய்விடுகிறது. உங்கள் கண்களில் தெரிந்த அதனுடைய காட்சி என்ன ஆகும்? அதுவும் உடனடியாக மறைந்து போய்விடும்.

அந்தப் பறவை பறந்து சென்ற பிறகும் அதனுடைய காட்சி நம் கண்களை விட்டுப் போகாவிட்டால் என்ன அர்த்தம்? நம் கண்கள் பழுதடைந்து விட்டன என்று தானே அர்த்தம்!

நல்ல உணவை நீங்கள் ருசித்துச் சாப்பிடலாம். தவறு ஏதும் இல்லை. ஆனால், நீங்கள் சாப்பிட்டு முடித்த பிறகும் அந்தச் சுவை உங்கள் நாவில் இருந்து மறையாத பட்சத்தில் நாக்கு பழுதடைந்து விட்டது என்று தான் அர்த்தம்.

இப்படி நமது ஐம்புலன்களால் மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவை அவற்றுக்கான பிரதிபலிப்புகளை கணந்தோறும் ஏற்படுத்துகின்றன.

அவை அந்தப் பிரதிபலிப்புகளிலிருந்து விடுபடுவதற்கு முயற்சி ஏதாவது செய்ய வேண்டுமா?

விடுபடுவது, விடுதலையோடு இருப்பது என்பது அந்தப் புலன்களின் இயற்கையான நிலை. அவற்றின் விடுதலைக்கு எந்த முயற்சியும் தேவையில்லை.

ஒரு நிலைக் கண்ணாடி தனது முன்னால் வரும் நபரை அப்படியே பிரதிபலித்துக் காட்டுகிறது. ஆனால் எந்த பிரதி பலிப்பையும் அது பிடித்து வைத்துக் கொள்வதில்லை.

இந்தக் கண்ணாடி தனது பிரதிபலிப்பில் இருந்து விடுபட ஏதாவது செய்கிறதா?

இல்லை. பிரதிபலிப்பதும் பிரதிபலிப்பிலிருந்து விடுபடுவதும் அதனுடைய இயற்கையான நிலை. நமது ஐந்து புலன்களும் இவ்வாறுதான் செயல்படுகின்றன.

இந்த ஐந்து புலன்களையடுத்த ஆறாவது ஒரு புலன் இருக்கிறது. அதுதான் நம் மனது.

நம்முடைய மனதும் ஒரு புலனாகவே செயல்படுகிறது. எத்தனையோ விதமான இன்ப துன்பங்கள் நம் மனதில் பிரதிபலிக்கின்றன. அவை யாவும் மறுகணமே மனதில் இருந்து மறைந்து விடுகின்றன. அதுதான் அதனுடைய இயற்கை. இன்பதுன்ப அனுபவங்களில் இருந்து விடுபட அது எந்த முயற்சியிலும் ஈடுபடத் தேவையில்லை. விடுதலை என்பது அதனுடைய இயற்கையான நிலை.

பிறகு என்னதான் இங்கு பிரச்சனை?

மற்ற புலன்களில் இல்லாத ஓர் அமைப்பு நமது மனது எனும் இந்தப் புலனில் மட்டுமே அமைந்துள்ளது. அதுதான் நமது நினைவு (memory)

எனும் 'அனுபவப் பதிவுகள்'. நமது அனுபவங்கள் அனைத்தும் நம் மனதில் சேமிக்கப்படுகின்றன.

அந்த சேமிப்பு நமக்கு தேவைப்படுகிறது.

ஒருவர் பொய் சொல்லி உங்களை ஏமாற்றி உங்களிடம் பணம் வாங்கி செல்கிறார். அவர் உங்களை ஏமாற்றியதை நீங்களும் கண்டுபிடித்து விடுகிறீர்கள். இந்நிலையில் அவர் உங்களை ஏமாற்றி பணம் பறிக்கும் நோக்கத்துடன் மீண்டும் வருகிறார். அவரைப் பற்றிய பழைய செய்திகளை எல்லாம் நினைவில் வைக்காமல் இருந்தால் என்ன ஆகும்?

நீங்கள் மீண்டும் அவர் கூறும் பொய்களில் ஏமாந்து விடுவீர்கள். அவரிடம் உங்களால் எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள முடியாது. நினைவுப்பதிவு இங்குதான் தேவைப்படுகிறது. அதுதான் உங்களை காப்பாற்றுகிறது.

நிலைக் கண்ணாடியில் தெரியும் உருவங்கள் அனைத்தும் கண்ணாடியை நிர்வாகம் செய்வதற்காக அல்ல. அதில் தோன்றும் உருவத்தைப் பார்த்து எதிரில் இருப்பவர்தான் தன்னைச் சீரமைத்திட – அலங்கரித்திட பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

நம் மனதிலுள்ள நினைவுப் பதிவுகள்தாம் பகுத்தறிவு என்ற பெயரில் நம்மிடம் செயல்படுகிறது. இந்தப் பகுத்தறிவானது நாம் எதிர்கொள்ளும் சூழ்நிலையை நிர்வாகம் செய்வதற்காக மட்டுமே அமைந்துள்ளது. மற்றபடி, மனதை நிர்வாகம் செய்ய எந்தப் பதிவும் தேவையில்லை. எந்தப் பகுத்தறிவும் தேவையில்லை.

ஒவ்வொரு புலனும் தாமாகவே தன்னைச் சமன் செய்து கொள்வதைப் போல், நமது மனதும் தாமாகவே தன்னைச் சமன் செய்து கொள்ளும் தன்மையிலேயே உள்ளது.

நம் மன இயக்கத்தின் உள்ளே பகுத்தறிவையும் கொண்டு போனால் அங்கு என்ன நடக்கும்?

நல்லது–கெட்டது, வேண்டியது–வேண்டாதது, இன்பமானது–துன்பமானது என, நம் மன அனுபவங்கள் அனைத்தும் துண்டாடப்பட்டு விடும்.

இதனால் விரும்பியதை பற்றிப் பிடிப்பதாகவும், விரும்பாததை துரத்தி அடிப்பதாகவும் நம் மனமே ஒரு போர்க்களம் ஆகிவிடும்.

நமது புலன் அனுபவங்கள் அனைத்தும் ஓர் உயிருள்ள ஆறாக ஓடிக் கொண்டி ருக்கின்றன. தாமாகத் தோன்றுவதாகவும் இயல்பாக ஓடி மறைவதாகவும் உள்ளன.

புலன் அனுபவங்கள் எவையும் தேங்கி நிற்பதில்லை.

ஓடிக்கொண்டிருக்கும் ஒரு நீரோடையில் கையை விட்டுப் பார்த்திருக்கிறீர்களா?

ஓடிக்கொண்டிருக்கும் ஒரு நீரோடையில் கையை விட்டால் என்ன ஆகும்? ஒரு சுழல் ஏற்பட்டுவிடும். அது இடது வலதாக சுற்றுகிறது என வைத்துக்கொள்வோம். கையை வலதிலிருந்து இடது பக்கமாக மாற்றிச் சுழற்றுவோம் எனில் சுழல் போய்விடுமா?

போகாது! கையை வெளியே எடுக்கும் வரை அந்தச் சுழல் மறையாது. நாம் கையை எடுத்து விட்டோமானால் அந்தச் சுழல் தாமக மறைந்துவிடும். நீரோட்டமும் தடங்கலின்றி ஓடிப்போகும்.

நம் மனதின் உள்ளே இத்தகைய மனச் சுழலை ஏற்படுத்துவது நம் அறிவு தான்.

இந்த அறிவுக்கு அங்கு எந்த வேலையும் கிடையாது. ஆனாலும் நம் அறிவு மன இயக்கத்தின் உள்ளே நுழைந்து தேவையற்ற குழப்பத்தை ஏற்படுத்தி விடுகிறது.

இப்படி, அதை பிரச்சினைக்குள் ஆழ்த்துவது இந்த அறிவு தான் என கண்டுபிடித்து, மன இயக்கத்தை அறிவின் கட்டுப்பாட்டில் இருந்து விடுவித்து விட்டால் என்ன ஆகும்?

மன இயக்கமும் மற்ற புலன்களைப் போல் சுதந்திரம் அடைந்து விடும். எதுவுமே தங்கி இருக்காத நிலை ஏற்பட்டுவிடும்.

கோவையில் ஓர் அம்மா இருந்தார். முற்பிறவியில் அவர் ராமகிருஷ்ண பரமஹம்சரின் நேரடிச் சீடராக இருந்ததாக அவரைப்பற்றி கூறுவார்கள்.

திடீரென சமாதி நிலைக்குப் போய் விடுவார். பலவிதமான பரவச நிலைகள் அவருக்கு ஏற்படுவதுண்டு. இத்தனைக்கும் அவர் எவ்வித ஆன்மீக தியானப் பயிற்சியிலும் ஈடுபடுவது கிடையாது.

ஒரு முறை அவர் என்னை போனில் தொடர்பு கொண்டார்.

"எனக்கு சிலவேளைகளில் ஒருவிதமான பரவச நிலை ஏற்படுகிறது ஐயா. இந்த நிலை ஏற்படும் போது நானே கடவுளாக இருப்பது போல் தோன்றுகிறது. வள்ளலாரும் ஊசிமுனை போன்ற ஓர் உயர்ந்த நிலை இருப்பதாகக் கூறுகிறார். நான் அனுபவித்த அந்த நிலைதான் வள்ளலார் கூறும் உயர் நிலை என்று தோன்றுகிறது. அதனால் இந்த அனுபவத்தை தான் நான் அனுபவித்த அனுபவங்களிலேயே உயர்ந்த அனுபவமாக உணர்கிறேன். இதைப் பற்றி நீங்கள் என்ன கூறுகிறீர்கள் ஐயா?" என்றார் அவர்.

நான் சொன்னேன்:

"உங்களுக்கு ஏற்பட்ட அனுபவங்கள் யாவும் அபூர்வமானவை. உயர்ந்தவை. சராசரி மனிதர்களுக்கு இத்தகைய அனுபவங்கள் எவையும் ஏற்படாது. அவர்களுக்கும் இத்தகைய அனுபவங்கள் ஏற்பட வேண்டுமானால் அவர்கள் தியானப் பயிற்சிகள் பலவற்றில் ஈடுபட்டிருக்க வேண்டும். அதன் விளைவாகத்தான் அவர்களால் இத்தகைய அனுபவங்களைப் பெற முடியும். நீங்கள் எத்தகைய

பயிற்சி முயற்சிகளிலும் ஈடுபடாத நிலையில் உங்களுக்கு இத்தகைய அனுபவங்கள் ஏற்படுகிறது என்றால், நீங்கள் பிறவியிலேயே சில தகுதிகளோடு வந்திருக்கிறீர்கள். அதில் எந்தச் சந்தேகமும் இல்லை....

"ஆனால், இத்தகைய பரவச நிலை ஏற்படுவதற்கு பதிலாக கோபம், வருத்தம், பயம், டென்ஷன், பொறாமை, ஆசை, வெறுப்பு, மற்றும் அருவருப்பான உணர்ச்சி ஏதாவது ஏற்பட்டால் அந்த உணர்ச்சிகளுக்கும் இந்தப் பரவச நிலைக்கும் இடையே எந்த வித்தியாசமும் கிடையாது....

"உணர்ச்சிகளைப் பொறுத்த அளவில் உயர்ந்தவை தாழ்ந்தவை கிடையாது. அவை எத்தகைய உணர்ச்சிகளானாலும் சரி; அவை எப்படி தோன்றுகிறதோ அப்படியே மறைந்து விட வேண்டும்! நல்ல அனுபவம் என்று எதையாவது பற்றி பிடிப்பது தான் தவறு. நமது மன அனுபவங்கள் யாவும் ஓர் உயிருள்ள ஆறாக அமைந்திருக்க வேண்டும். எவையும் அங்கே தங்கக் கூடாது. தேங்கக்கூடாது!...

"ஆகவே, உயர்ந்த நிலை, உயர்ந்த அனுபவம் என்ற பெயரில் எதையாவது பிடித்து வைத்துக் கொள்ளாதீர்கள் அது உங்களுடைய உடல் மற்றும் மன ஆரோக்கியத்தை சிதைத்துவிடும்....

"நமது ஒவ்வொரு உணர்ச்சியும் நம் உடலில் சில ரசாயனங்களை சுரக்கச் செய்கின்றன. அந்த ரசாயனச் சுரப்பின் காரணமாகவே நமக்கு இன்ப துன்ப அனுபவங்கள் ஏற்படுகின்றன. பரவசத்தைத் தரும் ரசாயனமாக இருந்தாலும் கூட, அது ஓர் அளவுக்கு அதிகமாக ஏற்படும் போது அது நம் உடலையே முடக்கிப் போட்டுவிடும்...

"ஆன்மிகம் பரவசநிலை என்று உயர்வாக பேசும் அளவுக்கு எதுவுமே கிடையாது. இவை அனைத்துமே நம் உடலில் ஏற்படும் உணர்வுகளே! ரசாயன விளைவுகளே! அளவோடு இருந்தால் நன்மையாக இருக்கும். அமிர்தமே ஆனாலும் அளவைத் தாண்டும்போது நஞ்சாக மாறி நம்மையே பாதித்துவிடும்...

"மனதுக்குள் எதையும் பற்றி பிடிக்காதீர்கள். அனைத்தும் தோன்றிமறைய அனுமதியுங்கள். உங்கள் மனம் ஓர் உயிருள்ள ஆறாக ஓடிக் கொண்டிருக்க அதற்கு முழு சுதந்திரம் வழங்குங்கள்!" என்றேன் .

அவரும் புரிந்து கொண்டார்.



# கேள்வி ? பதில்...

V.A.P. சரவணன். சேலம்.
செல் : 99942 05880

ஞானம் பெற்றவர்களுக்கு நனவு நிலையில் ஏற்படும் பாதிப்பின் தன்மை கனவு நிலையில் ஏற்படும் பாதிப்பின் தன்மைக்கு வந்துவிடும் என்பது எவ்வாறு?

**கேள்வி :** மனதின் இயக்கத்தைப் புரிந்து கொண்டால் கனவு நிலையின் தன்மைக்கே நமது நனவு நிலையும் வந்துவிடும் என்கிறார்கள். இதன் பொருள் என்ன? நனவு நிலையில் நமக்கு ஏற்படும் பாதிப்பிலிருந்து நாம் முழுமையாக விடுபட்டு விடுவோமா? விளக்கம் தேவை

**பதில் :** மனதின் இயக்கத்தினைப் புரிந்து கொள்வதற்காகவே கனவு மற்றும் நனவு நிலைகள் விளக்கப்படுகின்றன.

கனவு என்றால் என்ன? நனவு என்றால் என்ன? என்பதை நாம் முதலில் புரிந்து கொள்ள வேண்டும்.

ஆழ்ந்த உறக்கத்தில் நமக்கு நாம் இருப்பதும் கூட தெரியாது. கனவும் ஏற்படாது. தூக்கத்திலிருந்து விழித்த பிறகு மட்டும்தான் நாம் நன்றாக தூங்கி இருக்கிறோம் என்பதையே உணர்ந்து கொள்ள முடியும்.

நமது மனம் எப்பொழுதும் ஏதோ ஓர் எண்ண உணர்வை சதா வெளிப்படுத்திக் கொண்டுதான் இருக்கும்.

நாம் நனவு நிலையில் ஏற்படும் எண்ண உணர்வுகளை தான் எண்ணங்கள், உணர்வுகள் என்று குறிப்பிடுகின்றோம்.

தூக்கத்தில் மனம் வெளிப்படுத்தும் எண்ணத்தை தான் கனவு என்று நாம் குறிப்பிடுகின்றோம்.

கனவு நிலைக்கும் நனவு நிலைக்கும் என்ன வித்தியாசம்?

தூக்கத்தில் நாம் கனவு காணும் போது, நமக்கு அது கனவு என்று தெரியாது. நாம் சந்திக்கும் நிகழ்வு நிஜம் போலவே அப்போது தெரியும். அந்த நேரத்தில் அது கனவு என்று நம்மால் உணர முடியாது. கனவிலிருந்து விழித்த பிறகு மட்டுமே நாம் கண்டு கொண்டிருந்தது கனவு என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடியும்.

உதாரணமாக கனவில், இறந்து போன ஒருவர் நம்மிடம் பேசிக் கொண்டிருக்கலாம். உயிருடன் இருக்கும் ஒருவர் இறந்து போனதாக தோன்றலாம். மதிப்புமிக்க ஒருவரிடம் நாம் தவறாக நடந்து கொண்டதாக தோன்றலாம். அல்லது அவர் நம்மிடம் தவறாக நடந்து கொண்டதாக கூடத் தோன்றலாம். கொடிய பாம்புகள் துரத்துவது போல தோன்றலாம். காட்டு விலங்குகள் நம்மை துரத்துவது போல தோன்றலாம். நமக்கு விபத்து ஏற்பட்டு விட்டதை போல தோன்றலாம். நாம் மருத்துவமனையில் இறக்கும் தருவாயில் இருப்பதை போல கூட தோன்றலாம்.

இப்படி சம்மந்தா சம்மந்தமில்லாமல் எப்படி வேண்டுமானாலும் கனவில் எண்ணங்கள் தோன்றலாம். இவை அனைத்தும் நிஜம் போலவே தோன்றும். நாமும் கனவில் இருக்கும் ஒரு நபராக இருப்போமேதவிர கனவு காண்பவனாக இருக்கமாட்டோம். கனவு காண்பவனாக நம்மை உணரமாட்டோம். ஆதலால் கனவில் நாம் குறுக்கீடு செய்யமாட்டோம்.

கனவு கண்டு கொண்டிருக்கும் நாம் விழித்தவுடன் நமக்கு கனவினால் ஏற்பட்ட பாதிப்பினால் படபடப்பு, உடல் வியர்த்தல் கூட ஏற்பட்டு இருக்கலாம். ஓர் அதிர்ச்சியான கனவிலிருந்து விழித்தப் பிறகு நாம் சிறுநீர் கழித்துவிட்டு வருவதோ, சற்றே தண்ணீர் குடித்து கொள்வதோ அல்லது விபூதியை நெற்றியில் வைத்துக் கொள்வதோ என்பது நமக்கு நாமே செய்துகொள்ளும் சமாதானமே ஆகும்.

முடிந்துபோன கனவுக்காக நாம் எதையும் செய்யத் தேவையில்லை. வேறு எதையும் நம்மால் செய்யவும் முடியாது. நாம் கனவிலிருந்து விழித்த பிறகு, அந்த சம்பவம் கனவு என்று புரிந்து கொண்டால் போதும். தாமாகவே அந்த கனவின் பாதிப்பிலிருந்து விடுபட்டு விடுவோம்.

இப்படித்தான் நமது கனவு அம்சம் உள்ளது.

நனவு நிலை என்றால் என்ன? இங்கு நமது மனம் எப்படி செயல்படுகிறது.

நனவு நிலை என்பது நாம் விழித்திருக்கும் நிலையே ஆகும். நாம் விழித்திருக்கும் நிலையிலும் கூட நமது மனம் சதா எண்ண உணர்வுகளை வெளிப்படுத்திக் கொண்டேதான் இருக்கும். இந்த விழித்திருக்கும் நிலையிலும் கூட நமக்கு தோன்றும் எண்ணங்களுக்கும் உணர்வுகளுக்கும் பின்னால் நம்முடைய கவனமே இல்லாமல் நம்மையறியாமல் நாம் சென்று விடுவோம். ஏதோ ஒரு குறிப்பிட்ட கணத்தில் நமக்கு விழிப்பு ஏற்பட்டு கவனமற்ற தன்மையிலிருந்து கவனத் தன்மைக்கு வந்து விடுவோம். இதைத்தான் விழிப்பு நிலை என்று குறிப்பிடுகிறோம்.

கனவிலிருந்து விழிப்பதும், நனவு நிலையிலிருந்து இப்படி விழிப்பதும் உண்மையில் ஒன்றே. அதாவது முடிந்துபோன எண்ண உணர்வுகளில் இருந்து விடுபட்ட நிலையே. முடிந்துபோன கனவை கனவு என எடுத்துக்கொண்ட நாம், நனவு நிலையில் தோன்றும் எண்ண உணர்வுகளை அப்படி எடுத்துக்கொள்வதில்லை. அதனோடு போராடி விடுகிறோம். கனவில் தோன்றிய எண்ண உணர்வுகளுக்கு முக்கியத்துவம் தராத நாம்

நனவு நிலையில் தோன்றும் எண்ண உணர்வுகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து அதனோடு போராடுகிறோம்.

காரணம் நனவில் தோன்றும் எண்ண உணர்வுகளை நாம் உருவாக்கியதாகக் கருதி அதற்கு நாம் பொறுப்பெடுத்துக்கொள்கிறோம்.

உண்மையில் நமக்குத்தோன்றும் எண்ண உணர்வுகளுக்கு நாம் காரணமல்ல, கனவைப்போல் அவை அவைபோக்கில் தாமாகத் தோன்றி தாமாக மறைபவை.

இதனைப் புரிந்துகொண்டு, நமக்கு ஏற்ட்ட எண்ண உணர்வுகளுக்கு நாம் பொறுப்பெடுக்காத நிலையில்,

இரண்டும் ஒன்றுதான் என்று புரிந்துகொண்ட நிலையில், ஆதாவது, இரண்டுமே தாமாக தோன்றும் எண்ண உணர்வுகள்தாம் என புரிந்துகொண்ட நிலையில், நனவில் தோன்றும் எண்ண உணர்வுகளோடும் நமது போராட்டம் கைவிடப்படுகிறது. அகத்தில் நமது எண்ண உணர்வுகளை மாற்றியமைக்க போராடாத நிலையில், நனவும் கனவு நிலைக்கு வந்துவிடுகிறது. நனவு நிலையில் நடந்த முடிந்த எண்ண உணர்வுகளின் தொகுப்பில் நமக்கு யாதொரு வேலையும் இல்லை எனப் புரிந்துகொண்டு நம்முடைய வெளி வேலைகளான செயலுக்கு ஏதேனும் அதில் இருந்து தகவலை எடுத்துக்கொண்டு சிந்தித்து செயல்பட வேண்டுமெனில் எடுத்துக்கொள்ளலாம். மற்றபடி நம்மையறியாமல் நடந்த அனைத்து எண்ண உணர்வும் முடிந்து போன கனவு நிலையே என்று முடித்துக் கொள்ள வேண்டும்.

கனவிலிருந்து ஒரு விழிப்பு ஏற்படுவதுபோல் இங்கே நம் நனவு நிலையில் ஒரு விழிப்பு ஏற்படுகிறது. நமது நனவு நிலையில் ஏற்படும் இந்த நிகழ்வைக் கூட கனவிலிருந்து ஏற்படும் விழிப்பு என்று எடுத்துக் கொள்ள வேண்டும்.

முடிந்த போன கனவிற்கு நாம் ஒன்றும் செய்ய முடியாது. அதே போல நனவு நிலையில் விழிப்பு ஏற்படுவதற்கு முன்பாக ஏற்பட்ட எண்ண உணர்வுகளுக்கும் நம்மையறியாமல் அதன் பின்னால் சென்ற நமது போக்கு என அனைத்தையும் ஒட்டுமொத்தமாக முடிந்துபோன கனவாக எடுத்துக் கொள்ள வேண்டும் .

இது நனவு நிலையில் ஏற்படும் கனவு நிலை என்று எடுத்துக்கொள்ள வேண்டும்.

விழித்திருக்கும் நிலையில் ஏற்படும் கனவு நிலை என்று எடுத்துக் கொள்ள வேண்டும்.

முடிந்துபோன கனவு நிலையிலும், நனவு நிலையில் ஏற்படும் கனவு நிலையிலும் நமக்கு எந்த ஒரு வேலையும் இல்லை எனப் புரிந்துகொள்வதே ஞான புரிதல்.

இப்படி நாம் மனதின் இயக்கத்தைப் புரிந்து கொள்வதைதான் 'கனவு நிலையின் தன்மைக்கு நமது நனவு நிலையும் வந்துவிடும்' என்று கூறப்படுவது ஆகும்

இங்கு நனவு நிலையில் நம்மை அறியாமல் ஏற்பட்ட எணண உணர்வு தாக்கங்களின் ஆதிக்க பிடியும் கனவு நிலையின் தன்மைக்கு போய்விடுகிறது முக்கியத்துவம் இழந்து விடுகிறது; அதன் பாதிப்புகளிலிருந்து நாம் முற்றிலுமாக விடுபட்டு விடுகிறோம்.

புற உலகத்தில் நமக்கு தேவைப்படும் செயல் செய்வதற்கு அகத்தில் ஏற்பட்ட எண்ண உணர்வை தூண்டுதலாக பயன்படுத்திக் கொண்டு செயல்படும் தன்மைக்கு வந்து விடுவோம்.

முடிந்தவை அனைத்தும் முடிந்து போன கனவுகள் அங்கு நமக்கு எந்த வேலையும் இல்லை என்று முடித்துக் கொள்ள வேண்டும்.

கனவிலும் நம்மை அறியாத நனவிலும் நமக்கு எந்த வேலையும் இல்லை

K.S. ஜீவமணி
செல் : 97891 65555



# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

நமது பகவத் பாதை ஜுலை மாத இதழ் ஊரடங்கு காரணமாக வெளியிட முடியவில்லை என்பதை தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த ஊரடங்கு காலகட்டத்தில் நமக்கு தினமும் பல மணி நேரங்கள் ஓய்வு கிடைக்கிறது. பலருக்கும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களை சந்தித்து உரையாட வேண்டுமென்ற ஆர்வம் இருக்கிறது.

ஆனால் அதற்கு வாய்ப்பில்லை.

அதனால்தான் தினமும் மாலை ஐயாவுடன் zoom meetingல் சத்சங்கம் ஏற்பாடு செய்யப்பட்டு சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்து கொண்டு பயன் அடைந்து வருகின்றனர்.

இந்த zoom meeting-க்கான link தினமும் வாட்ஸப்பில் அனுப்பி வருகிறோம். Link கிடைக்காதவர்கள் என்னோடு 9789165555 என்ற அலைபேசி எண்ணில் தொடர்பு கொண்டு விபரம் பெற்று கலந்து கொள்ளலாம்.

நாம் இக்காலகட்டத்தில் ஞான முகாம்களோ சத்சங்க கூட்டங்களோ ஏற்பாடு செய்ய முடியாத காரணத்தால் zoom meeting ஏற்பாடு செய்து வருகிறோம்.

இதில் கலந்து கொள்பவர்களுக்கு தங்களது சந்தேகங்களையும் கேள்விகளையும் பகவத் ஐயாவிடம் கேட்டு ஞானத் தெளிவு பெற மிகவும் பயனுள்ள வகையில் உள்ளது. எனவே வாய்ப்புள்ள அனைவரும் கலந்து கொண்டு பயன்பெற வேண்டுகிறோம்.

புதிய அன்பர்களுக்கும் இதைப் பற்றி விவரம் தெரிவிக்க வேண்டுகிறோம். தினமும் zoom meeting முடிந்தவுடன் நமது Bagavath padhai என்ற YouTube-ல் பதிவேற்றம் (upload) செய்துவிடுகிறோம். எனவே கலந்து கொள்ள இயலாதவர்கள் எப்போது வேண்டுமானாலும் YouTube-ல் பார்த்து பயன் பெறலாம்.

நமக்கு ஏற்படும் சூழ்நிலைகள் எப்படிவேண்டுமானாலும் இருக்கலாம். அதனை நமக்கு தகுந்தாற் போல் நேர்மறையாக (positive) மாற்றிக் கொள்வது நம் கைவசமே உள்ளது.

இப்போது நாம் எதிர்கொள்ளும் புறச்சூழல் இதுவரை நமது வாழ்க்கைப் பயணத்தில் நாம் எதிர்கொள்ளாத சூழல்.

நமது வாழ்க்கைப் பயணம் என்பது நாமாக பயணிப்பதல்ல.

நமது முயற்சியின்றி காலத்தால் பயணிப்பது. இதில்தான் எத்தனை அனுபவங்கள்!

அனைத்தும் நமக்கு மகிழ்ச்சியை மட்டுமா தருகிறது?

அதன் போக்கில் வந்து நம் அகத்தை இசைத்து அனைத்து உணர்வுகளையும் வெளிப்படுத்தி செல்கிறது.

இசையை உணரும் தகுதியை வழங்கிய இறைவன், இசைக்கும் தகுதியும் நமக்கு வழங்கவில்லை.

முடிந்தவைகளை மாற்ற இயலாது...

வருபவை என்னவென்று தெரியாது...

இருப்பவை மட்டுமே நிஜம்... நிகழ்காலம்...

இதிலும் நமது செயல் மட்டுமே நமது கைவசம்...

நம்மை மீறிய அனைத்தும் நம் கைவசம் இல்லாதது... இறைவனின் கையில் உள்ளது.

எனவே நடப்பவை எல்லாம் நன்மைக்கே...

என்ற நேர்மறை சிந்தனையோடு நமது செயலில் நன்மையை கடைபிடிப்போமாக.

## ஸ்ரீபகவத் மிஷன் புக் ஸ்டால்

சென்னையிலிருந்து சேலம் செல்லும் பைபாஸ் சாலையில், மின்னாம்பள்ளி அருகில், மகேந்திரா இன்ஜினியரிங் காலேஜ்க்கு எதிரில், சின்ன கவுண்டாபுரம் பிரிவு ரோட்டில் நமது **ஸ்ரீபகவத் மிஷன் புக் ஸ்டால்** அமைந்துள்ளது. இங்கு ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் அனைத்து தமிழ், ஆங்கில நூல்கள் மற்றும் ஆடியோ வீடியோ குறுந்தகடுகள் (CD) கிடைக்கும். நமது அன்பர்கள் இதனைப் பயன்படுத்திக்கொள்வதோடு நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் தெரிவித்து அவர்களும் வாங்கி பயன்பெற உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**ஸ்ரீபகவத் மிஷன்,** சேலம்.

# சென்னை ஸ்ரீபகவத் பவன்

அய்யா மீது தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

சென்னையில் ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்காக நாம் ஏற்கெனவே முயற்சி எடுத்திருந்தோம். அது சில தவிர்க்க முடியாத காரணங்களால் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது.

தற்போது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி மீண்டும் அதற்கான ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

சென்னையில் அமைய இருக்கின்ற ஸ்ரீபகவத் பவன் நமது அய்யாவின் இல்லமாகவும் நாம் அனைவரும் ஐயாவை சந்தித்து தங்கி உரையாடிச் செல்ல ஏற்றவகையில் நமக்கான பகவத் பவன் இல்லமாகவும் அமையவிருக்கிறது.

இதனை நாம் கட்டுவதற்குப் பதிலாக புதியதாக கட்டி முடிக்கப்பட்ட இல்லமாக வாங்க முடிவெடுத்து இருக்கிறோம்.

இதனை வாங்குவதற்கு நமக்குத் தேவைப்படும் தொகையை நிறுவனர் (Founder) நன்கொடையின் மூலம் பெறலாம் என முடிவெடுத்துள்ளோம்.

முன்பே சென்னை ஸ்ரீபகவத் பவன் கட்டிடத்திற்கான நிதி வழங்கியவர்களின் நிதியும் இந்த வகைக்கு பயன்படுத்தப்படும்.

ஏற்கெனவே நிதி வழங்கிய இவர்களுக்கு நாம் அனைவரின் சார்பாக உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

நமது சென்னை ஸ்ரீபகவத் பவன் இல்லத்தில் பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவரின் பங்களிப்பும் இருக்க வேண்டும் என்பதே முக்கியம்.

பங்களிப்புத் தொகை எவ்வளவு என்பது முக்கியமல்ல.

பங்களிக்கும் உள்ளமே முக்கியம்.

எனவே தங்களால் இயன்றதை வழங்கும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். உள்ளன்போடு தாங்கள் அளிக்கும் பங்களிப்பை மனமுவந்து பெற்றுக் கொள்கிறோம்.

வாருங்கள் ஒன்றிணைவோம். நம் அனைவரின் ஒருங்கிணைந்த கூட்டு முயற்சியால் நமக்கான இல்லத்தை உருவாக்குவோம்.

## ஸ்ரீ பகவத் ஐயாவின்
### தமிழ் மற்றும் ஆங்கில நூல்கள்
Free Download

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் தமிழ் மற்றும் ஆங்கில நூல்கள் அனைத்தையும் (ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள் நூலைத் தவிர) கீழே கொடுக்கப்பட்டுள்ள இணையத்தள முகவரியில் இலவசமாக download செய்து படிக்கலாம். இந்த வாய்ப்பினை நீங்கள் பயன்படுத்திக் கொள்வதோடு உங்களுடைய நண்பர்களுக்கும் தெரிவித்து அவர்களும் பயன் பெறச் செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

புத்தகமாக (Hard Copy) படிக்க விரும்புபவர்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியில் தொடர்புகொண்டு கொரியர் மூலம் நூல்களைப் பெற்று படிக்கலாம். **www.sribagavath.org** (இணையதளத்தில் இலவசமாக download படிப்பது வெளிநாட்டு அன்பர்களுக்கு மிகவும் வசதியாக இருக்கும்)


Books PDF Download

அன்புடன்

**ஸ்ரீபகவத் மிஷன்,**
31, இராமலிங்க சாமி தெரு,
அம்மாபேட்டை, சேலம்-636003.
9994205880, 9789165555,7904118421.

## பகவத் பாதை மாத இதழ்
Free Download

நமது பகவத் பாதை தமிழ் மாத இதழ் 2011ஆம் ஆண்டு அக்டோபர் மாதமும் Bagavath Path என்ற ஆங்கில மாத இதழ் 2016ஆம் ஆண்டு அக்டோபர் மாதமும் தொடங்கப்பட்டது.

தொடக்கத்திலிருந்து இன்றுவரை உள்ள அனைத்து மாத இதழ்களையும் இலவசமாக download செய்து படிக்கலாம். ஒவ்வொரு மாத இதழிலும் ஞானத் தெளிவு தரும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் கட்டுரை, வெவ்வேறு கோணங்களில் எளிதாக புரிந்து கொள்ளும் படி வெளிவந்துள்ளது.

இத்துடன் கேள்வி – பதில், ஜென் கதைகள் என அனைத்தும் நமது அன்றாட பிரச்சினைகளுக்குத் தீர்வு வழங்குவதாகவும் அமைந்துள்ளன. எனவே முந்தைய மாத இதழ்களைப் படிக்க விரும்புபவர்கள் கீழே கொடுக்கப்பட்ட இணையதள முகவரியில் இலவசமாக download செய்து படிக்கலாம்.

இந்தத் தகவலை நண்பர்களுக்கும் தெரிவித்து அவர்களும் பயன் பெறச் செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.


For Magazine Download

**www.sribagavathmission.org**

# நிகழ்ச்சி நிழல்கள்





ஸ்ரீ பகவத் காட்டேஜ் கட்டிடப் பணிகளை
பார்வையிடும்போது...





வீட்டில் ஓய்வாக செய்தித்தாள்
பார்க்கும் போது...

# ஸ்ரீ பகவத் குடில்கள்



அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரிய கவுண்டாபுரத்தில் இயற்கை எழில்மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர். மீண்டும் ஞான முகாம் Lockdown-க்கு பிறகு நடைபெறும்.

முகாம்களுக்குக் குடும்பத்துடன் வருபவர்கள் சேர்ந்து தாங்கமுடியவில்லை.ஆண்களும் பெண்களும் தனித்தனியாகத் தங்கவைக்கப்பட்டனர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 8 பெரிய (11'x16') அறைகளும் 8 சிறிய (8'x8') அறைகளும் தனித்தனி குளியலறைகளுடன் அமைக்கப்பட்டு கட்டிட வேலைகள் நடைபெற்று வருகிறது.

இதில் 8 பெரிய அறைகளுக்கான ஸ்ரீ பகவத் காட்டேஜ் உறுப்பினர் சேர்க்கை நிறைவடைந்துவிட்டது.

சிறிய அறைகளுக்கான உறுப்பினர் நன்கொடை ரூபாய் 3 லட்சம் என நிர்ணயம் செய்து இருக்கிறோம். அந்த வகையில் இதுவரை இரண்டு உறுப்பினர்கள் சேர்ந்துள்ளார்கள். இன்னும் ஆறு உறுப்பினர்கள் மட்டும் சேர்க்கப்படவுள்ளனர்.

ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்கள், வருடத்தில் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இதில் தங்கி தங்களுக்குச் சொந்தமாக பயன்படுத்திக் கொள்ளலாம். இவர்களது உடமைகளையும் இவர்களது அறையிலுள்ள Locker-ல் பாதுகாப்பாக வைத்துச் செல்லலாம்.

குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு ஸ்ரீபகவத் மிஷனின் அனுமதியோடு இவர்கள் தங்களது Membership – ஐ மற்றவர்களுக்கு மாற்றலாம்.

இவர்கள் இங்கு தங்காத நாட்களில் மட்டுமே மற்றவர்கள் ஞான முகாம் நடைபெறும் நாட்களில் மட்டும் தங்க அனுமதிக்கப்படுவார்கள். லாக்கர்களைப் பயன்படுத்தும் உரிமை அவர்களுக்குக் கிடையாது.

இன்னும் ஆறு உறுப்பினர்கள் மட்டுமே இணைக்கப்பட உள்ளதால், ஆர்வம் உள்ளவர்கள் உடனடியாக தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

இது சம்பந்தமான சிறப்புத் தகவல்களுக்கு நேரடியாக போனில் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3. **99942 05880, 97891 65555**

# ஜென் கதை

## சும்மா இருப்பது எப்படி ?

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

இளைஞன் ஒருவன் ஆன்மிகத்தில் கூறப்பட்ட "சும்மா இரு" என்ற தத்துவத்தை உணர்ந்து கொண்டு அதை எப்படியாவது தன்னுள் செயல்படுத்தி பார்க்க வேண்டும் என்று தீவிரமாக முயன்று கொண்டிருந்தான்.

மனதில் எந்த எண்ண அலையும் தோன்றாமல் சும்மா இருப்பதற்கு மிகவும் தீவிரமாக முயற்சி செய்தான்.

எவ்வளவு முயன்றும் அவனால் சும்மா இருக்க முடியவில்லை. சும்மா இரு என்பதின் உட்பொருள் அவனுக்கு விளங்கியதாகவும் தெரியவில்லை.

இதற்காகவே பல மகான்களையும் ஞானிகளையும் சந்தித்தான்.

இறுதியாக ஒரு வாழும் ஞானியை சந்தித்து சும்மா இரு என்பதை எப்படி உணர்ந்து கொள்வது என்று விளக்கம் கேட்டான்.

அந்த ஞானியும் சும்மாயிரு என்பது செயல் எதுவும் செய்யாமல் இருப்பது அன்று. மனதில் ஏற்படும் அனுபவங்களிலிருந்தும் மனபந்தங்களிலிருந்தும் விடுபட்டு இருப்பது என்று பலவாறான விளக்கங்களை அளித்தார்.

எத்தனை விளக்கங்களை அளித்த போதும் அவன் மனது நிறைவடையாமல் இருந்தது.

அவரும் பல முறை விளக்கம் கூறியும் அவனுக்கு விளங்கிய பாடில்லை.

பிறகு அவனை ஒரு ஆற்றங்கரைக்கு குளிப்பதற்காக அழைத்துச் சென்றார்.

ஆற்றங்கரையில் உனக்கு நீச்சல் தெரியுமா? என்றார்.

நல்லா தெரியும் சுவாமி என்றான்.

இந்த ஆற்றில் குதித்து நீச்சலடித்து வா என்றார்.

அவன் ஆற்றின் ஓட்டத்தை எதிர்த்து நீச்சல் அடிக்க தொடங்கினான்.

தொடர்ந்து ஆற்றின் போக்குக்கு எதிராக நீச்சல் அடித்துக் கொண்டு களைத்து இருந்தான்.

ஞானி அவனை நோக்கி இப்பொழுது நீ நீச்சல் அடிப்பதை நிறுத்தி விடு என்றார்.

அவனும் நிறுத்திவிட்டான். ஆற்றின் இயக்கம் அவனை ஒட்டுமொத்தமாக ஆற்றின் போக்கோடு இழுத்துச் சென்றது.

ஆற்றின் போக்கோடு சிறிது தூரம் சென்று கரை ஏறினான்.

இளைஞன் மீண்டும் ஞானியிடம் வந்து சேர்ந்தான்.

"சும்மா இரு என்பது என்றால் என்ன வென்று புரிந்ததா?" என்றார் ஞானி

"புரியவில்லையே சுவாமி" என்றான்.

"நீ ஆற்றின் ஓட்டத்தை எதிர்த்து நீச்சலடிப்பது என்பது இயற்கையின் ஓட்டத்தை எதிர்த்து நீ செயல்படுவதே. நீ களைத்து தான் போவாய்." என்றார்.

"ஆமாம் சுவாமி" என்றான்.

"உன் இயக்கத்தை நிறுத்தியவுடன் ஆற்றின் இயற்கையான இயக்கம் உன்னை இழுத்துச் செல்கிறது அல்லவா? அதுதான் சும்மாயிரு " என்றார்.

இளைஞன் மனதில் ஏதோ ஒரு பொறி தட்டியது. சும்மா இரு என்பதின் உள்ளார்ந்த பொருளை உணர்ந்தான்.

ஆற்றின் போக்கும் நமது மனதின் போக்கும் ஒன்றே. இயற்கையான ஆற்றின் போக்குக்கு எதிராக நாம் நீச்சல் அடிப்பதும் மனதில் இருந்து வெளிப்படும் எண்ணங்களை எதிர்த்து செயல்படுவதும் ஒன்றே ஆகும் என்ற முடிவுக்கு வந்துவிட வேண்டும். எந்த நிலையில் நாம் நம் செயல்பாட்டை நிறுத்திக் கொள்கிறோமோ அப்பொழுது இயற்கையின் இயக்கம் நம்மையும் தன்னோடு சேர்த்து இழுத்துச் சென்று விடும்.

ஆற்றின் இயற்கையான ஓட்டம்தான் சும்மா இரு என்பதை தம்முள் உணர்ந்தான் இளைஞன்.